පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

14 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

කතෝලික ධර්මය I, II
கத்தோலிக்க திருமறை I, II
Catholicism I, II

# கத்தோலிக்க திருமறை II

※ **முதலாம்** வினாவுக்கும் மேலும் **நான்கு** வினாக்களுக்குமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.
※ முதலாம் வினாவின் விடைக்கு **20** புள்ளிகளும் ஏனைய ஒவ்வொரு வினாவின் விடைக்கும் **10** புள்ளிகள் வீதமும் வழங்கப்படும்.

**1.** (i) மனிதன் படைப்புகள் அனைத்திற்கும் மேலான படைப்பாக விளங்குவதற்கான காரணங்கள் **இரண்டு** எழுதுக.
(ii) தூய பவுல் கூறுவதன்படி மனிதனில் காணப்படும் இரு உடல்களும் எவை ?
(iii) ஆரம்ப திருச்சபையின் **இரண்டு** பண்புகளை எழுதுக.
(iv) திருவழிபாட்டின் பிரதான பகுதிகள் **இரண்டைப்** பெயரிடுக.
(v) நீரினால் திருமுழுக்குப் பெறாவிடினும் இறையரசில் உட்பிரவேசிக்கக்கூடிய **இரு** பிரிவினரைப் பெயரிடுக.
(vi) வரலாற்றில் இறைவன் மனிதனுக்குத் தன்னை எவ்வாறு வெளிப்படுத்தினார் என்பதற்கு **இரு** உதாரணங்கள் தருக.
(vii) ஒப்புரவு அருட்சாதனத்தைக் குறிக்கும் வேறு **இரு** பெயர்களைத் தருக.
(viii) இயேசு சீடர்களின் பாதங்களைக் கழுவிய செயலின் மூலம் நாம் கற்றுக்கொள்ளக்கூடிய முன்மாதிரிகள் **இரண்டைக்** குறிப்பிடுக.
(ix) இயேசு செபித்த சந்தர்ப்பங்கள் **இரண்டு** எழுதுக.
(x) இலங்கை கத்தோலிக்க ஆயர் மன்றத்தினால் அனுமதிக்கப்பட்டுள்ள கடன் திருநாட்கள் **இரண்டைத்** தருக.

**2.** (i) மக்கள் பணியின் அருளடையாளங்கள் **இரண்டையும்** குறிப்பிடுக.
(ii) கிறிஸ்தவர்களாகப் புகுமுக அருளடையாளங்களைப் பெற்றுக் கொள்வதால் நமது வாழ்வில் ஏற்படும் மாற்றங்கள் **மூன்றை** எழுதுக.
(iii) விடுதலைப் பயணத்தில் இஸ்ராயேல் மக்கள் இறை பராமரிப்பை எவ்வாறு அனுபவித்தனர் என்பதனைச் சுருக்கமாக விவரிக்குக.

**3.** (i) பத்துக் கட்டளைகளில் அடங்கியுள்ள பிரதான படிப்பினைகள் **இரண்டையும்** எழுதுக.
(ii) மலைப் பொழிவில் இயேசு கற்பித்த பேறுகள் **மூன்றினைக்** குறிப்பிடுக.
(iii) பேறுகள் மூலம் இறை அரசுக்காகக் கிடைக்கும் அழைப்பினை வாழ்க்கையோடு தொடர்புபடுத்திக் கொள்ளும் விதத்தைச் சுருக்கமாக விவரிக்குக.

**4.** (i) ஒல்லாந்தர் ஆட்சிக் காலத்தில் கத்தோலிக்க விசுவாசத்தைப் பாதுகாத்துக்கொள்ள முன்னின்ற ஒறத்தோறியன் சபைக் குருக்கள் ஆற்றிய பணிகள் **இரண்டினை** எழுதுக.
(ii) ஒல்லாந்தர் காலத்தில் கத்தோலிக்கர்கள் அனுபவித்த சவால்கள் **மூன்றினைக்** குறிப்பிடுக.
(iii) ஒரு கிறிஸ்தவ பிள்ளையாக, கத்தோலிக்க விசுவாசத்தைப் பாதுகாத்துக்கொள்ள உமது பங்கில், உம்மால் மேற்கொள்ளக்கூடிய செயற்பாடுகள் **ஐந்தினைச்** சுருக்கமாக விவரிக்குக.

**5.** (i) இடைவிடாத செபத்தில் ஈடுபடுவதிலுள்ள தடைகள் **இரண்டு** எழுதுக.
(ii) திருச்சபை நமக்குக் கற்பிக்கும் பொதுச் செபங்கள் **மூன்றினைக்** குறிப்பிடுக.
(iii) நோய்வாய்ப்பட்டிருக்கும் உமது நண்பர் ஒருவருக்கு வெகு விரைவில் சுகம் கிடைக்க வேண்டி செபிக்கக்கூடிய ஒரு செபத்தினை எழுதுக.

**6.** (i) இரண்டாம் வத்திக்கான் சங்கத்திற்கேற்ப துறவற வாழ்வில் முதலிடம் பெற வேண்டிய பொது விடயங்கள் **இரண்டு** எழுதுக.
(ii) இலங்கைக்கு வருகைதந்த துறவற சபைகளைச் சேர்ந்த மறைத் தூதுவர்கள் மூலம் நிறைவேற்றப்பட்ட பணிகள் **மூன்றினைக்** குறிப்பிடுக.
(iii) "துறவற வாழ்வு இவ்வுலகில் ஒரு பேறுபெற்ற நிலையாகும்" என்பது பற்றிச் சுருக்கமாக விவரிக்குக.

**7.** பின்வரும் தலைப்புகளில் ஏதேனும் **இரண்டைத்** தெரிவுசெய்து, சிறுகுறிப்பு எழுதுக.
(i) தூய யோசப் வாஸ் அடிகளார் புனிதராக்கப்படல் (ii) தூய இரண்டாம் அருளப்பர் சின்னப்பர்
(iii) பரிசேயனும் வரிதண்டுபவனும் பற்றிய உவமை (iv) இறைவனின் படைப்பாகிய இயற்கையைப் பாதுகாப்போம்
(v) திருமுழுக்கின் வழியாக நாம் பெறும் வரங்கள்

* * *

**24.** இலங்கைத் திருச்சபையின் விசுவாசக் கருவூலங்களைப் பண்பாட்டுமயமாக்க முன்னின்றுழைத்தவர்
(1) தூய பிரான்சிஸ் சேவியர் (2) தூய யோசேவாஸ் அடிகளார்
(3) தூய டிலாசால் (4) தொன் யுவான் தர்மபால அரசன்

**25.** தூய ஆவி அப்போஸ்தலர்கள் மீது இறங்கியது
(1) பெரிய வியாழனன்று (2) விண்ணேற்பு நாளில்
(3) பெந்தகோஸ்தே நாளில் (4) கிறிஸ்து அரசர் திருவிழாவன்று

**26.** தூய ஆவியினால் போஷிக்கப்பட்ட கிறிஸ்தவர்களாகிய நமக்குக் கிடைக்கும் ஆன்மீகக் கொடையாவது
(1) மற்றவரைப் போன்று செயற்படும் ஆற்றலாகும்.
(2) ஒருவருக்குப் பக்கசார்பாகச் சேவைசெய்யும் ஆற்றலாகும்.
(3) இறைவாக்கு உரைக்கும் வரமாகும்.
(4) மற்றவர்களை விமர்சிக்கும் ஆற்றலாகும்.

**27.** தூய பவுல் கலாத்தியர் திருமுகம் (5 : 22 - 23) இல் கிறிஸ்தவர்களாகிய நமக்கு சகிப்புத்தன்மையுடன் மற்றவர்களை மன்னிக்கும் ஆற்றலைப் பெற்றுத்தரும் தூய ஆவியின் கனி எனக் குறிப்பிடப்படுவது
(1) பொறுமை (2) பரித்தியாகம் (3) தன்னடக்கம் (4) ஆன்மசக்தி

**28.** நற்கருணைப் பலியைக் குறிப்பிடும் வேறொரு பெயர்
(1) இலௌகீக உணவு (2) புறவினத்தாரின் உணவு
(3) பசி ஏற்படாத உணவு (4) பங்கேற்றலின் உணவு

**29.** திருமணத்தின் கட்டவிழாமை பற்றி தூய மாற்கு நற்செய்தியில் கூறப்படுவது என்ன ?
(1) மனிதன் தனிமையாக வாழ்தல் நல்லதன்று.
(2) கடவுள் இணைத்ததை மனிதன் பிரிக்காதிருக்கட்டும்!
(3) ஆணும் பெண்ணுமாக அவர்களைப் படைத்தார்.
(4) அவர்கள் இருவரும் ஒரே உடலாய் இருப்பர்.

**30.** பழைய ஏற்பாட்டில் குறிப்பிடப்பட்டுள்ள முதற் குரு
(1) மெல்கிசேதெக் (2) சக்கரியா (3) சிமியோன் (4) சாவுல்

**31.** துறவற வார்த்தைப்பாடுகள் மூன்றுமாவன,
(1) பணிவு, கீழ்படிதல், ஏழ்மை (2) அஞ்சாமை, கீழ்படிதல், ஏழ்மை
(3) கற்பு, ஏழ்மை, கீழ்படிதல் (4) ஏழ்மை, கற்பு, அஞ்சாமை

**32.** தியானத்திலும் ஆழ்தியானத்திலும் ஈடுபட்ட துறவற சபை
(1) பெரிய கார்மேல் சபை (2) மரியன்னையின் சகோதரிகள்
(3) ஏழைகளின் சிறிய சகோதரிகள் (4) இறை பராமரிப்பின் துறவற சபை

**33.** "பிறர் உடைமையைக் கவர்ந்திடாதே" என்ற படிப்பினை தொடர்பான கட்டளைகள்
(1) 4 உம் 8 உம் (2) 5 உம் 7 உம் (3) 6 உம் 9 உம் (4) 7 உம் 10 உம்

**34.** இரக்கம் உடையோர் பேறுபெற்றோர். அவர்கள் பெறுவது
(1) நிறைவு (2) ஆறுதல் (3) விண்ணரசு (4) இரக்கம்

**35.** 'பேறுபெற்றோர்' என்பதற்கு கிரேக்க மொழியில் பயன்படுத்தப்படும் சொல்
(1) பசிலெய்யா (2) எக்கிலேசியா (3) புரோபெட்டஸ் (4) மக்காரியோயி

**36.** கிறிஸ்தவர்களாகிய எம்மில் கனிவுடமை இருப்பதால்
(1) கிறிஸ்துவைப் பின்பற்றுபவராகச் செயற்பட முடியும்.
(2) அனைவரதும் மனதைக் கவர்ந்து கொள்ள முடியும்.
(3) அது இறைவனுக்குள் வாழ உதவும்.
(4) இறை விசுவாசத்தை வளர்த்துக் கொள்ள முடியும்.

**37.** செபத்தைக் கற்பிக்கும் முதற் பாடசாலை
(1) மறை பாடசாலை (2) கிறிஸ்தவக் குடும்பம் (3) பாடசாலை (4) ஆலயம்

**38.** தினமும் குடும்பத்தில் அனைவருடனும் ஒன்றுகூடி செபமாலை செபிப்பது,
(1) தனிச் செபமாகும். (2) தியான வழிபாடாகும்.
(3) விசுவாசிகளின் செபமாகும். (4) குழுச் செபமாகும்.

**39.** புதிய ஏற்பாட்டில் கர்த்தர் கற்பித்த செபத்தினைப் போன்ற இன்னொரு செபம்
(1) விசுவாசப் பிரமாணம் (2) நற்கருணை மன்றாட்டு
(3) இயேசுவின் குருத்துவ செபம் (4) உத்தம மனஸ்தாப செபம்

**40.** இயேசு தாம் 'இறைமகன்' என்பதை வெளிப்படையாகக் கூறியமையை தமது நற்செய்தியில் குறிப்பிடுபவர்
(1) தூய யோவான் (2) தூய லூக்கா (3) தூய மாற்கு (4) தூய மத்தேயு

* *

[பக். 4 ஐப் பார்க்க

9. மனித உடலில் உறுப்புகள் பலவாயினும் உடல் ஒன்றாயிருப்பது போல, தூய திருச்சபையில் கிறிஸ்தவர்கள் அனைவரும் கிறிஸ்துவில் ஒரே உடலாய் இருக்கிறார்கள் எனப் புனித பவுல் குறிப்பிடும் திருமுகம் எது ?
(1) 1 கொரிந்தியர் (2) 1 தெசலோனிக்கர் (3) கலாத்தியர் (4) பிலமோன்

10. புதிய ஏற்பாட்டில் குறிப்பிடப்படும் நிக்கதேமு, ஒரு
(1) பரிசேயராவார். (2) யூத தலைமைக் குருவாவார்.
(3) வரி தண்டுபவராவார். (4) மறைநூல் அறிஞராவார்.

11. புகுமுக அருளடையாளங்களை வரிசைப்படி குறிப்பிடும் தெரிவு எது ?
(1) உறுதிப்பூசுதல், ஒப்புரவு, குருத்துவம் (2) திருமுழுக்கு, தேவநற்கருணை, உறுதிப்பூசுதல்
(3) தேவநற்கருணை, மெய்விவாகம், திருமுழுக்கு (4) திருமுழுக்கு, குருத்துவம், உறுதிப்பூசுதல்

12. திவ்விய நற்கருணை என்பது
(1) உடலை ஊட்டம் பெறச்செய்யும் பௌதிக உணவாகும்.
(2) நன்றி செலுத்துதலாகும்.
(3) ஆன்ம உணவாகக் கிடைக்கும் பௌதிக உணவாகும்.
(4) தூய ஆவியின் கொடைகளில் பிரதான இடம்பெறுவதாகும்.

13. மெய்விவாகம் என்னும் அருளடையாளத்தின் மூலம் உரித்தாவது
(1) ஒன்றுபட்ட விசுவாச வாழ்வு (2) உறுதியான எதிர்பார்க்கை
(3) இறை அன்பு (4) கிறிஸ்தவ குடும்ப வாழ்வு

14. சமுதாயத்தைக் கட்டியெழுப்புவதில் பிரதான அடித்தளமாக விளங்குவது,
(1) பங்கு மக்களாவர். (2) சபைத் தலைவர்களாவர்.
(3) குடும்பமாகும். (4) மரியாயின் சேனையாகும்.

15. அப்போஸ்தலர்கள் திருத்தொண்டர்களை நியமித்தது,
(1) மறையைக் கற்பிக்க நேரத்தைப் பெற்றுக்கொள்வதற்காகும்.
(2) அப்போஸ்தலர்களின் தேவைகளை நிறைவேற்றிக்கொள்வதற்காகும்.
(3) மக்களுக்கு முன்மாதிரியாக வாழ்வதற்காகும்.
(4) அப்போஸ்தலர்களின் தலைமைத்துவத்தைப் பகிரங்கப்படுத்துவதற்காகும்.

16. குருத்துவம் என்னும் திருவருட்சாதனத்தை இயேசு கிறிஸ்து தாமே நிறுவியது
(1) பெந்தகோஸ்தே நாளிலாகும். (2) உலகைப் படைத்தபோதாகும்.
(3) விண்ணேற்பு அடைந்த நாளிலாகும். (4) இறுதி இராப்போசனத்தின் போதாகும்.

17. திருவிவிலியத்தின் பழைய ஏற்பாட்டில் பத்துக் கட்டளைகள் பற்றிக் கூறும் இரு நூல்களும் யாவை ?
(1) தொடக்கநூல், எண்ணிக்கை (2) எண்ணிக்கை, லேவியர்
(3) இணைச்சட்டம், விடுதலைப் பயணம் (4) லேவியர், தொடக்கநூல்

18. கத்தோலிக்க திருச்சபையின் மறைக்கல்வியின்படி பழைய ஏற்பாட்டில் செபம் தொடர்பாகக் குறிப்பிடப்படும் விசேட பகுதி யாது ?
(1) எண்ணிக்கை (2) திருப்பாடல்கள் (3) சபை உரையாளர் (4) நீதிமொழிகள்

19. தூய திருச்சபையின் செப வகைகள் மூன்றும் யாவை ?
(1) வார்த்தை, தியானம், அமைதி (2) வார்த்தை, எழுதுதல், அமைதி
(3) தியானம், வார்த்தை, எழுதுதல் (4) எழுதுதல், அமைதி, தியானம்

20. இறைவன் உலகைப் படைத்ததன் மூலம் கிறிஸ்தவர்களாகிய எமக்கு அழைப்பு விடுப்பது
(1) இயற்கையைப் பாதுகாத்து அபிவிருத்தி செய்வதற்காகும்.
(2) விசுவாசத்தினதும் செபத்தினதும் வாழ்க்கையை நடாத்துவதற்காகும்.
(3) தன்னைத் தியாகம் செய்து நாட்டுக்காக அர்ப்பணிப்பதற்காகும்.
(4) இறைவனின் அன்பை இனங்கண்டு அதற்கு பிரதி அன்பு காட்டுவதற்காகும்.

21. திருவிவிலியத்தின் தொடக்கநூலின்படி படைப்பின் முதலாவது கதை எந்த மரபின் அடிப்படையில் உருவாகியுள்ளது?
(1) யாவே மரபின்படி (2) எலோகிம் மரபின்படி
(3) குரு மரபின்படி (4) இணைச்சட்ட மரபின்படி

22. "வார்த்தை மனுவுருவாகி எம்முடனே குடிகொண்டார்" என்னும் வசனத்தை உள்ளடக்கிய திருச்சபையின் பொதுச்செபம் யாது ?
(1) மங்கள வார்த்தைச் செபம் (2) கர்த்தர் கற்பித்த செபம்
(3) திருப்புகழ் மாலை (4) மூவேளைச் செபம்

23. ஒல்லாந்தர் காலத்தில் இலங்கையில் கிறிஸ்தவ மதத்தைப் பாதுகாப்பதற்காக முன்னின்று உழைத்த துறவற சபை எது?
(1) ஒறத்தோறியன் சபை (2) டொமினிக்கன் சபை (3) பிரான்சிஸ்கன் சபை (4) இயேசு சபை

[பக். 3 ஐப் பார்க்க


Department of Examinations Sri Lanka

OL/2017/14-T-I,II(OLD) 1601



පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

14 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

කතෝලික ධර්මය I, II
கத்தோலிக்க திருமறை I, II
Catholicism I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

## கத்தோலிக்க திருமறை I

**கவனிக்க :**

(i) எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.
(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
(iii) உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.
(iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, பின்பற்றுக.

**1.** தொடக்க நூலில் எடுத்துக்காட்டப்படுவதன்படி மனிதன் படைக்கப்பட்டது
(1) அனைத்து படைப்புகளையும் தான் விரும்பியபடி அனுபவிப்பதற்காகும்.
(2) அனைத்து படைப்புகளையும் ஆள்வதுடன் தனக்கு மட்டும் பயன்படுத்துவதற்காகும்.
(3) எதிர்காலத்தைப் பற்றிச் சிந்திக்காது அன்றாடம் சீவிப்பதற்காகும்.
(4) அனைத்து படைப்புகளையும் பாதுகாத்து, பயன்படுத்துவதுடன் அபிவிருத்தி செய்வதற்காகும்.

**2.** படைப்பின் இரண்டாவது கதையின்படி மனிதன் பௌதிக உலகைச் சார்ந்தவனாக இருப்பது
(1) அவனில் உணர்வுகளும் சுயாதீனமும் இருப்பதாலாகும்.
(2) அவன் மண்ணால் படைக்கப்பட்டிருப்பதாலாகும்.
(3) அவன் ஏனைய அனைத்து படைப்புகளையும் விட மேலானவனாக இருப்பதாலாகும்.
(4) அவன் உடல்ரீதியாக இவ்வுலகில் வாழ்வதாலாகும்.

**3.** வானத்து விண்மீன்களின் எண்ணிக்கையைப் போன்று வழிமரபினரையும் நிலையான நாட்டையும் தருவதாக இறைவன் உடன்படிக்கை செய்துகொண்டது
(1) மோசேயுடன் (2) யாக்கோபுடன் (3) ஆபிரகாமுடன் (4) ஈசாக்குடன்

**4.** செங்கடலைக் கடந்த நிகழ்வு எமக்கு எடுத்துக்காட்டுவது
(1) மக்களுக்கு இறை பராமரிப்பு கிடைக்கிறது என்பதன் அடையாளத்தையாகும்.
(2) மக்கள் அடிமைத்தனத்திலிருந்து விடுதலை பெற்றதன் அடையாளத்தையாகும்.
(3) இது இன்னுமொரு வரலாற்றுக் கதை என்பதனையாகும்.
(4) புதியதொரு நாட்டை நோக்கி மக்களை வழிநடத்துவதையாகும்.

**5.** மக்களுக்கு உடன்படிக்கை வாழ்க்கையை நினைவூட்டி இறைவனின் செய்தியை மக்களிடத்திற்குக் கொண்டுசெல்ல இறைவனால் தேர்ந்து கொள்ளப்பட்டவர்கள்
(1) இறைவாக்கினர்கள் (2) யூத தலைமைக் குருக்கள்
(3) இஸ்ராயேல் மக்கள் தலைவர்கள் (4) இஸ்ராயேல் அரசர்கள்

**6.** இறைவன் கிறிஸ்துவின் மூலம் முழுமையாக வெளிப்படுத்தப்பட்டார் எனக் குறிப்பிடப்பட்டிருப்பது
(1) தூய யோவான் நற்செய்தியில் (2) திருவெளிப்பாட்டு நூலில்
(3) எபிரேயர் திருமுகத்தில் (4) உரோமையர் திருமுகத்தில்

**7.** இயேசுவின் அனைத்து போதனைகளினதும் உள்ளடக்கம் பேறுகளாகும். அவற்றை எமக்கு முன்வைப்பவர்கள்
(1) தூய மாற்கு, தூய லூக்கா ஆகியோர். (2) தூய மத்தேயு, தூய லூக்கா ஆகியோர்.
(3) தூய லூக்கா, தூய யோவான் ஆகியோர். (4) தூய யோவான், தூய மாற்கு ஆகியோர்.

**8.** தூய ஆவியின் கனிகளாகக் குறிப்பிடத்தக்கன யாவை ?
(1) அன்பு, எதிர்பார்ப்பு, சமாதானம் (2) ஞானம், நன்மை, விசுவாசம்
(3) உறுதி, எதிர்பார்ப்பு, மகிழ்ச்சி (4) பொறுமை, விசுவாசம், மகிழ்ச்சி

[பக். 2 ஐப் பார்க்க